அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி வெளியீடு

॥ श्रीः ॥



"एषा शंकरभारती विजयते निर्वाणसौख्यप्रदा"

ஏஷா ஶங்கரபா⁴ரதீ விஜயதே நிர்வாணஸௌக்²யப்ரதா³

# श्रीजगद्गुरुग्रन्थमाला

ஶ்ரீஜக³த்³கு³ருக்³ரந்த²மாலா

# ॥ स्वात्मनिरूपणम् ॥

# ॥ ஸ்வாத்மநிரூபணம் ॥

ஶ்ரீ வாணீவிலாஸ் பிரஸ்
ஶ்ரீரங்கம்.
1964



॥ श्रीगुरुभ्यो नमः ॥

## ॥ समर्पणम् ॥

श्रीमच्छंकरदेशिकस्य महिता मूर्तिद्वयी या स्थिता
तत्रैका हि तिरोबभूव विजने केदारनाथस्थले ।
अन्या वर्णमयी तु भाष्यनिचयस्तोत्रप्रबन्धात्मना
सर्वत्रैव समुज्ज्वला विजयते ताभ्यां तनुभ्यां नमः ॥ १ ॥

यस्तत्रास्ति लघुप्रबन्धनिचयः स्तोत्राणि भूयांसि वा
तेषां द्राविडभाषयाऽनुवदनं विद्वद्वरैः कारितम् ।
श्रीमच्छंकरसेविनी सुसमितिः सम्यक्प्रकाश्याधुना
विद्यातीर्थपदे समर्पयति तत् लोकोपकारक्षमम् ॥ २ ॥

शंकरगुरुसंस्थापितसर्वजगद्वन्द्यशारदापीठम् ।
शंकरसेवासमितिः प्रकरणमालार्पणादलंकुरुते ॥ ३ ॥

शंकरगुरुवररचितप्रकरणमालां शुभानुवादयुताम् ।
शंकरपरंपरागतविद्यातीर्थे समार्पिपत्समितिः ॥ ४ ॥

शंकरसेवारसिकाः शांकरसिद्धान्तसारसर्वस्वम् ।
शंकरसेवासमितिप्रकटनमालां सदाऽपि सेवन्ताम् ॥ ५ ॥

## பதிப்புரை

**कारुण्य सारसान्द्राः कांक्षितवरदानकल्पक विशेषाः ।**
**श्रीगुरुचरणकटाक्षाः शिशिराः शमयन्ति चित्त संतापम् ॥**

**காருண்ய ஸாரஸாந்த்³ராः காங்க்ஷிதவரதா³னகல்பக விஶேஷாः ।**
**ஶ்ரீகு³ருசரணகடாக்ஷாः ஶிஶிராः ஶமயந்தி சித்த ஸந்தாபம் ॥**

ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீ தக்ஷிணாம்நாய சிருங்ககிரி ஸ்ரீ சாரதா பீடாதிபதி ஸ்ரீமத் அபிநவவித்யாதீர்த்த மஹா ஸ்வாமிகள் அவர்களின் திவ்யானுக்ரஹமஹிமையால் "ஸ்ரீ ஜகத்குரு கிரந்தமாலாவின்" மலர் மலர்ந்து தனது தைவிக மணத்தை எங்கும் பரவச்செய்ய நேயர்களைத் தேடி வருகிறது. இதில் 154 சுலோகங்கள்கொண்ட "ஸ்வாத்ம் நிரூபணம்" என்னும் பிரகரணம் முழுவதும் வழக்கம்போல் தமிழில் பதவுரை, பொழிப்புரை, பொழிப்புரை, விசேஷக் கருத்துரைகளுடன் வெளிவந்திருக் கிறது. இதன் கடைசியில்

**'स्वात्मनिरूपणमेतत्प्रकरणमन्तर्विचिन्त्यतां सद्भिः'**

**'ஸ்வாத்மநிரூபணமேதத்ப்ரகரணமந்தர்விசிந்த்யதாம் ஸத்³பி⁴ः'**

(ஸ்வாத்ம நிரூபணம் என்ற இந்த ப்ரகரணம் ஸாதுக்களால் மனதில் சிந்தனம் செய்யப்படட்டும்) என்று ஸ்ரீ சங்கரபகவத்பாதாசார்யரர் அவர்களே இதன் பெயரைக் கூறியிருக்கிறார்.

தேஹம், இந்திரியம் முதலியவற்றையும், பத்னீ புத்ராதிகளையும், நாம் ஆத்மா என்று ப்ரமத்தால் எண்ணி வியவஹாரம் செய்தபோதிலும் அவை கௌணாத்மாவா கவோ, மித்யாத்மாவாகவோ ஆகுமே தவிற முக்யாத்மாவல்ல. ஸச்சிதானந்த வஸ்துதான் தனது முக்யமான ஆத்மா. 'நான்' என்ற பதத்தால் குறிக்கப்படும் இந்த தனது ஆத்ம ஸ்வரூபத்தை நன்கு நிரூபணம் செய்வதால் இதற்கு இப்பெயர் அமைந்துள்ளது. இதை 3-வது சுலோகத்தில் கூறுகிறார். 'நான்' என்பதன் பொருளை சிஷ்யனின் அனுபவவாயிலாக அகாராதி க்ரமத்தில் 40 சுலோகங்களால் எடுத்துக் காட்டுவது இப்பிரகரணத்தின் தனிச் சிறப்பாகும்.

ஞான ஸாதனங்களெல்லாம் அமையப்பெற்று தன்னைச் சரணமடைந்த சிஷ்யனுக்கு ஸ்ரீ குருவானவர் மஹா வாக்யார்த்தத்தைக் காட்டி ஆத்ம தத்வத்தை உபதேசிக்கிறார். உடன் ஆத்மானுபவம் பெற்ற சிஷ்யன் தனது அனுபவத்தை விரிவா கக்கூறி கடைசியில் 4 சுலோகங்களால் ஸத்குரு மஹிமையை நன்கு எடுத்துக் காட்டுகிறான். குருவின் உபதேசத்தின் நடுவிலும் (சுலோகம் 24, 41, 42, 43) எத்தனை ஸாதனங்கள் இருந்தபோதிலும் குருகிருபை இல்லாவிட்டால் ஆத்மானுபவம் ஏற்படாது என்பதை உறுதியாகக் கூறுகிறார். ஆத்மானுபவம்மட்டுமென்ன?. குரு கிருபை இருந்தால்தான் இடைஞ்சலில்லாமல் நல்வழியில் செல்லமுடியும். மங்கள

சுலோகமாக அமைந்துள்ள முதலிரண்டு சுலோகங்களும் குருவின் பெருமையைக் கூறுகின்றன.

திருக்குற்றுல க்ஷேத்திரத்தில் க்ரோதி - ஹூ ஆவணி - மீ கணபதி வாக்யார்த்த ஸபை நடைபெறும் ஸந்தர்ப்பத்தில் ஸ்ரீ சிருங்கேரி ஸ்ரீ ஜகத்குருவின் திவ்ய சரணுரவிந்தங்களில் பக்திப் பெருக்குடன் இம்மலர் ஸமர்ப்பிக்கப்படுகிறது.

**K.V. சுப்பரத்னம் அய்யர்**,
பொதுக் காரியதர்சி,
அகிலபாரத சங்கரஸேவா ஸமிதி.

# விஷயானுக்ரமணிகை

॥ श्रीः ॥

॥ ஶ்ரீ: ॥

# ॥ स्वात्मनिरूपणम् ॥

# ॥ ஸ்வாத்மநிரூபணம் ॥

**ஸ்ரீ சங்கரபகவத்பாதாசார்யர் அருளியது.**

[ஸ்வாத்மநிரூபணம் என்னும் இப்பிரகரணம் 154 சுலோகங்கள் கொண்டது.

**'स्वात्म निरूपण मेतत्प्रकरणमन्तविचिन्त्यतां सद्भिः'**

**'ஸ்வாத்ம நிரூபண மேதத்ப்ரகரணமந்தவிசிந்த்யதாம் ஸத்³பி⁴:'**

என்ற கடைசி சுலோகத்தில் இந்த பிரகரணத்தின் பெயரையும் இதைச் சிந்தனம் செய்வதால் வரும் பலனையும் ஆசார்யாள் காட்டியிருக்கிறுர். 3 வது சுலோகத்தில் இந்தப் பெயர் ஏற்பட்டதன் காரணத்தைக் கூறுகிறுர், 4 வது சுலோகம் முதல் 103 வது சுலோகம் வரை குருவின் உபதேசமாகவும், 105 வது சுலோகம் முதல் 162 வது சுலோகம் வரை சிஷ்யன் தனக்கு ஏற்பட்ட அனுபவத்தைக் கூறுவதாகவும், அமைந்துள்ளது. சிஷ்யன் கூறும் சுலோகங்கள் அகாராதி க்ரமத்தில் அமைந்திருப்பது இப்பிரகரணத்தின் தனிச்சிறப்பாகும். ஆசார்ய மஹிமை குருவின் உபதேசத்தில் காணப்படுவதுடன் சிஷ்யனும் விரிவாக இதைக் காட்டுகிறுன். பஞ்ச கோசங்களை விலக்கி தானே ஸ்வயம்பிரகாசமான ஆத்மா என்று காட்டி 'தத்த்வமஸி' மஹா வாக்யத்தின் பொருளை விரிவாக குரு உபதேசிக்கிறுர். பிரபஞ்சம் கல்பிதம், அதிஷ்டானமான ப்ரஹ்மமே ஸத்யம். குருவினுலும் உபநிஷத்தாலும் தான் அறிய முடியும், உபநிஷத்தாத்பர்யம் அத்வைதத்தில்தான், ஜீவன் எப்பொழுதுமே ப்ரஹ்மம் தான், அக்ஞானத்தால் தெரியவில்லை, ஞானம் ஒன்றுதான் ஸாதனம் இது முதலான பல கருத்துக்களை குரு உபதேசிக்கிறுர். இந்தப் பிரகரணத்தை சிந்தனம் செய்தால் மோஹம் விலகி ஸம்ஸார ஸாகரத்திலிருந்து கடைத்தேறலாம்.]

## குருவணக்கம்: -

**श्रीगुरुचरणद्वन्द्वं वन्देऽहं मथितदुःसहद्वन्द्वम् ।**
**भ्रान्तिग्रहोपशान्तिं पांसुमयं यस्य भसितमातनुते ॥ १ ॥**

**ஶ்ரீகு³ருசரணத்³வந்த்³வம் வந்தே³(அ)ஹம் மதி²தது³:ஸஹத்³வந்த்³வம் ।**
**ப்⁴ராந்திக்³ரஹோபஶாந்திம் பாம்ஸுமயம் யஸ்ய ப⁴ஸிதமாதனுதே ॥ 1 ॥**

**अहं** = நான்,

**அஹம்**

| | | |
|---|---|---|
| **श्रीगुरुचरणद्वन्द्वं**<br>**ஶ்ரீகு³ருசரணத்³வந்த்³வம்** | = | சோபையுடன் கூடிய ஸத்குருநாதரின் இருதிருவடிகளையும், |
| **वन्दे**<br>**வந்தே³** | = | வணங்குகிறேன். |
| **मथितदुःसहद्वन्द्वं**<br>**மதி²தது³:ஸஹத்³வந்த்³வம்** | = | பொறுக்கமுடியாத (ஸுகம்-துக்கம் முதலான) த்வந்த்வங்களை (இரட்டைகளை) அழிக்கின்றதான, |
| **यस्य**<br>**யஸ்ய** | = | எந்தத்திருவடியின், |
| **पांसुमयं**<br>**பாம்ஸுமயம்** | = | தூளியமான, |
| **भसितं**<br>**ப⁴ஸிதம்** | = | விபூதி, |
| **भ्रान्तिग्रहोपशान्तिं**<br>**ப்⁴ராந்திக்³ரஹோபஶாந்திம்** | = | ப்ராந்தி (விபரீதஞானம்) ஆகிற துஷ்டக்ரஹங்களின் சாந்தியை, |
| **आतनुते**<br>**ஆதனுதே** | = | செய்கிறதோ. |

ஶ்ரீமத் குருநாதரின் இரண்டு பாதங்களையும் நான் நமஸ்கரிக்கிறேன். அவை களே ஸஹிக்கமுடியாத ஸுகம் துக்கம் முதலான இரட்டைகளை நசுக்கியிருக்கின்றன. அவைகளின் தூளியாகிற விபூதி பிராந்தியாகிற துஷ்ட கிரஹத்தை சமனம் செய்து விடுகிறது. **(1)**

## देशिकवरं दयालुं वन्देऽहं निहत निखिलसंदेहम् ।
## यच्चरणद्वयमद्वयमनुभवमुपदिशति तत्पदस्यार्थम् ॥ २ ॥

**தே³ஶிகவரம் த³யாலும் வந்தே³(அ)ஹம் நிஹத நிகி²லஸந்தே³ஹம் ।**
**யச்சரணத்³வயமத்³வயமனுப⁴வமுபதி³ஶதி தத்பத³ஸ்யார்த²ம் ॥ 2 ॥**

| | | |
|---|---|---|
| **अहं**<br>**அஹம்** | = | நான், |
| **निहतनिखिलसंदेहम्**<br>**நிஹத நிகி²லஸந்தே³ஹம்** | = | எல்லாஸம்சயங்களையும் போக்கடித்த, |
| **दयालुं**<br>**த³யாலும்** | = | கிருபையை ஸ்வபாவமாகக்கொண்ட, |
| **देशिकवरं**<br>**தே³ஶிகவரம்** | = | ஸத்குரு சிரேஷ்டரை, |
| **वन्दे**<br>**வந்தே³** | = | நமஸ்கரிக்கிறேன், |

| | | |
|---|---|---|
| **यच्चरणद्वयं**<br>**யச்சரணத்³வயம்** | = | எவருடைய இருதிருவடிகளும், |
| **तत्पदस्य**<br>**தத்பத³ஸ்ய** | = | 'தத்' பதத்தின், |
| **अर्थं**<br>**அர்த²ம்** | = | பொருளான, |
| **अद्वयं**<br>**அத்³வயம்** | = | இரண்டற்ற, |
| **अनुभवं**<br>**அனுப⁴வம்** | = | ப்ரஹ்மானுபவத்தை, |
| **उपदिशति**<br>**உபதி³ஶதி** | = | உபதேசிக்கிறதோ. |

தயாளுவான தேசிகோத்தமரை நமஸ்கரிக்கிறேன். அவர் ஸகல ஸந்தேஹங்களையும் போக்கடித்தவர். அவருடைய இரு பாதங்களும் **தத்** (அது) என்கிற வார்த்தையின் அர்த்தமான இரண்டற்ற (பிரஹ்மத்தின்) அனுபவத்தை உபதேசம் செய்கின்றன. **(2)**

## ஆத்மஸ்வரூபம்: -

**संसारदावपावकसंतप्तः सकलसाधनोपेतः ।**
**आत्मनिरूपणनिपुणैर्वाक्यैः शिष्यः प्रवोध्यते गुरुणा ॥ ३ ॥**

**ஸம்ஸாரதா³வபாவகஸந்தப்த꞉ ஸகலஸாத⁴னோபேத꞉ ।**
**ஆத்மநிரூபணநிபுணைர்வாக்யை꞉ ஶிஷ்ய꞉ ப்ரவோத்⁴யதே கு³ருணா ॥ 3 ॥**

| | | |
|---|---|---|
| **संसारदावपावकसंतप्तः**<br>**ஸம்ஸாரதா³வபாவகஸந்தப்த꞉** | = | ஸம்ஸாரமாகிற காட்டுத்தீயினால் மிகுந்த தாபத்தை அடைந்தவனும், |
| **सकलसाधनोपेतः**<br>**ஸகலஸாத⁴னோபேத꞉** | = | எல்லா ஸாதனங்களுடனும் கூடினவனுமான, |
| **शिष्यः**<br>**ஶிஷ்ய꞉** | = | சிஷ்யன், |
| **गुरुणा**<br>**கு³ருணா** | = | ஆசார்யனால், |
| **आत्मनिरूपणनिपुणैः**<br>**ஆத்மநிரூபணநிபுணை** | = | ஆத்மஸ்வரூபத்தை எடுத்துக்காட்டுவதில் சக்தியுள்ள, |
| **वाक्यैः**<br>**வாக்யை꞉** | = | வாக்கியங்களால், |

| | | |
|---|---|---|
| **प्रवोध्यते**<br>**ப்ரவோத்⁴யதே** | = | அறிவுறுத்தப்படுகிறுன். |

ஸம்ஸாரமாகிற காட்டுத்தீயினுல் மிகவும் தாபத்தை அடைந்த சிஷ்யன் (ஆத்ம ஞானத்திற்கு அவசியம் வேண்டிய) எல்லா ஸாதனங்களோடு கூடினவனுகி குருவினுல் ஆத்மதத்வத்தை நன்கு எடுத்துச்சொல்ல வல்லமையுள்ள வாக்கியங்களால் நன்கு போதிக்கப்படுகிறுன். **(3)**

## अस्ति स्वयमित्यस्मिन्नर्थे कस्यास्ति संशयः पुंसः ।
## अत्रापि संशयश्चेत् संशयिता यः स एव भवसि त्वम् ॥ ४ ॥

**அஸ்தி ஸ்வயமித்யஸ்மின்னர்தே² கஸ்யாஸ்தி ஸம்ஶய: பும்ஸ: ।**
**அத்ராபி ஸம்ஶயஶ்சேத் ஸம்ஶயிதா ய: ஸ ஏவ ப⁴வஸி த்வம் ॥ 4 ॥**

| | | |
|---|---|---|
| **स्वयं**<br>**ஸ்வயம்** | = | தான், |
| **अस्ति**<br>**அஸ்தி** | = | இருக்கிறுன், |
| **इति**<br>**இதி** | = | என்ற, |
| **अस्मिन् अर्थे**<br>**அஸ்மின் அர்தே²** | = | இந்த விஷயத்தில், |
| **कस्य**<br>**கஸ்ய** | = | எந்த, |
| **पुंसः**<br>**பும்ஸ:** | = | புருஷனுக்கு, |
| **संशय:**<br>**ஸம்ஶய:** | = | ஸந்தேஹம், |
| **अस्ति**<br>**அஸ்தி** | = | இருக்கிறது? |
| **अत्रापि**<br>**அத்ராபி** | = | இந்த விஷயத்திலும், |
| **संशयश्चेत्**<br>**ஸம்ஶயஶ்சேத்** | = | ஸந்தேஹம், ஏற்படுமேயானுல், |
| **संशयिता**<br>**ஸம்ஶயிதா** | = | ஸந்தேஹப்படுகிறவன், |
| **यः**<br>**ய:** | = | எவனுே, |

**स एव** = அவனுகவே,

**ஸ ஏவ**

**त्वं** = நீ,

த்வம்

**भवसि** = இருக்கிறுய்.

**ப⁴வஸி**

நான் இருக்கிறேன் என்கிற இந்த இந்த விஷயத்தில் யாரேனும் மனுஷ்யனுக்கு ஸந்தேஹம் உண்டா? இதிலும் ஸந்தேஹம் உண்டு என்றுல் ஸந்தேஹப்படுகிறவன் யாரோ அவனேதான் நீ. **(4)**

## नाहमिति वेत्ति योऽसौ सत्यं ब्रह्मैव वेत्ति नास्तीति ।
## अहमस्मीति विजानन् ब्रह्म सौ स्वयं विजानाति ॥ ५ ॥

**நாஹமிதி வேத்தி யோ(அ)ஸௌ ஸத்யம் ப்³ரஹ்மைவ வேத்தி நாஸ்தீதி ।**
**அஹமஸ்மீதி விஜானன் ப்³ரஹ்ம ஸௌ ஸ்வயம் விஜாஞதி ॥ 5 ॥**

**अहं** = நான்,

**அஹம்**

**न** = இல்லை,

**ந**

**इति** = என்று,

**இதி**

**यः** = எவன்,

**யஃ**

**वेत्ति** = அறிகிறுனே,

**வேத்தி**

**असौ** = அவன்,

**அஸௌ**

**सत्यं** = உண்மையான,

**ஸத்யம்**

**ब्रह्मैव** = ப்ரஹ்மமே,

**ப்³ரஹ்மைவ**

**नास्ति** = இல்லை,

**நாஸ்தி**

**इति** = என்று,

**இதி**

**वेत्ति** = அறிகிறான்,
**வேத்தி**

**अहं** = நான்,
**அஹம்**

**अस्मि** = இருக்கிறேன்,
**அஸ்மி**

**इति** = என்று,
**இதி**

**विजानान्** = அறிகிற,
**விஜாநன்**

**असौ** = அவன்,
**அஸௌ**

**स्वयं** = தான்,
**ஸ்வயம்**

**ब्रह्मैव** = ப்ரஹ்மத்தையே,
**ப்$^{3}$ரஹ்மைவ**

**विजानाति** = அறிந்து கொள்கிறான்.
**விஜாநாதி**

எவன் ஒருவன் நான் இல்லை என்று நினைக்கிறானோ, அவன் உண்மையான பிரஹ்மமே இல்லை என்று அறிகிறான். நான் இருக்கிறேன் என்று அறிகிறவன், பிரஹ்மத்தையே தான் அறிந்தவனாகிறான்.

**ब्रह्म त्वमेव तस्मात्नाहं ब्रह्मेति मोहमात्रमिदम् ।**
**मोहेन भवति भेदः क्लेशाः सर्वे भवन्ति तन्मूलाः ॥ ६ ॥**

**ப்$^{3}$ரஹ்ம த்வமேவ தஸ்மாத்நாஹம் ப்$^{3}$ரஹ்மேதி மோஹமாத்ரமித$^{3}$ம் ।**
**மோஹேன ப$^{4}$வதி பே$^{4}$த$^{3}$ः க்லேஶாः ஸர்வே ப$^{4}$வந்தி தன்மூலாः ॥ 6 ॥**

**त्वं** = நீ,
**த்வம்**

**ब्रह्मैव** = ப்ரஹ்மம்தான்,
**ப்$^{3}$ரஹ்மைவ**

**तस्मात्** = ஆகையால்,
**தஸ்மாத்**

**अहं** = நான்,
**அஹம்**

| | | |
|---|---|---|
| **न ब्रम्हा**<br>**ந ப்³ரம்ஹா** | = | ப்ரஹ்மமில்லை, |
| **इति इदं**<br>**இதி இத³ம்** | = | என்ற இது, |
| **मोहमात्रमिदम्**<br>**மோஹமாத்ரமித³ம்** | = | அறியாமைதான், |
| **मोहेन**<br>**மோஹேன** | = | அறியாமையால், |
| **भेदः**<br>**பே⁴த³:** | = | வேற்றுமை, |
| **भवति**<br>**ப⁴வதி** | = | ஏற்படுகிறது, |
| **तन्मूलाः**<br>**தன்மூலா:** | = | அந்த வேற்றுமையின் காரணமாக, |
| **सर्वे क्लेशाः**<br>**ஸர்வே க்லேஶா:** | = | எல்லாத்துன்பங்களும், |
| **भवन्ति**<br>**ப⁴வந்தி** | = | ஏற்படுகின்றன. |

நீ பிரஹ்மம்தான் ஆகையால் நான் பிரஹ்மம் இல்லை என்பது. வெறும் மோஹமேயாகும். மோஹத்தினால் வேற்றுமை ஏற்படுகிறது. வேற்றுமை காரணமாக எல்லா கிலேசங்களும் உண்டாகின்றன. **(6)**

## ஐந்து கோசங்களும் ஆத்மாவல்ல: -

**न क्लेशपञ्चकमिदं भजते कृतकोशपञ्चकविवेकः ।**
**अत एव पञ्च कोशान् कुशलधियः संततं विचिन्वन्ति ॥ ७ ॥**

**ந க்லேஶபஞ்சகமித³ம் ப⁴ஜதே க்ருதகோஶபஞ்சகவிவேக: ।**
**அத ஏவ பஞ்ச கோஶான் குஶலதி⁴ய: ஸந்ததம் விசின்வந்தி ॥ 7 ॥**

| | | |
|---|---|---|
| **कृतकोशपञ्चकविवेकः**<br>**க்ருதகோஶபஞ்சகவிவேக:** | = | ஐந்து கோசங்களையும் பிரித்துத் தெரிந்துகொண்டவன், |
| **इदं**<br>**இத³ம்** | = | இந்த, |
| **क्लेशपञ्चकं**<br>**க்லேஶபஞ்சகம்** | = | ஐந்துவிதமான கிலேசங்களை, |

**न भजते** = அடைகிறதில்லை,

**ந ப⁴ஜதே**

**अत एव** = ஆகையினாலேயே,

**அத ஏவ**

**कुशलधियः** = புத்தித்திறமையுள்ளவர்கள்,

**குஶலதி⁴ய:**

**संततं** = எப்பொழுதும்,

**ஸந்ததம்**

**पञ्च कोशान्** = ஐந்து கோசங்களை,

**பஞ்ச கோஶான்**

**संततं** = எப்பொழுதும்,

**ஸந்ததம்**

**विचिन्वन्ति** = விசாரிக்கிறார்கள்.

**விசின்வந்தி**

(அவித்யா, அஸ்மிதா, ராகம், த்வேஷம், அபிநிவேசம், அறியாமை, அஹங்காரம், ஆசை, வெறுப்பு, பற்று என்னும்) இந்த ஐந்து கிலேசங்களையும் ஐந்து கோசங்களின் (அன்னமயம், பிராணமயம், மனோமயம், விக்ஞானமயம், ஆனந்தமயம்) தன்மையை பகுத்து அறிந்தவன் அடைவது இல்லை. இதனாலேயே நல்ல புத்தியுள்ளவர்கள் இடைவிடாமல் ஐந்து கோசங்களைப்பற்றி ஆலோசிக்கிறார்கள். **(7)**

**अन्नप्राणमनोमयविज्ञानानन्द पञ्चकोशानाम् ।**
**एकैकान्तरभाजां भजति विवेकात् प्रकाशतामात्मा ॥ ८ ॥**

**அன்னப்ராணமனோமயவிஜ்ஞானானந்த³ பஞ்சகோஶானாம் ।**
**ஏகைகாந்தரபா⁴ஜாம் ப⁴ஜதி விவேகாத் ப்ரகாஶதாமாத்மா ॥ 8 ॥**

**एकैकान्तरभाजां** = ஒன்றிற்குள் ஒன்றாக இருக்கிற,

**ஏகைகாந்தரபா⁴ஜாம்**

**अन्नप्राणमनोमयविज्ञानानन्द पञ्चकोशानां** = அன்னமயம், ப்ராணமயம், மனோமயம், விக்ஞானமயம், ஆனந்தமயம், என்ற ஐந்து கோசங்களையும்,

**विवेकात्** = பிரித்துத் தெரிந்துகொள்வதால்,

**விவேகாத்**

**आत्मा** = ஆத்மா,

**ஆத்மா**

**प्रकाशतां** = ப்ரகாசமாயிருக்கும் தன்மையை,

**ப்ரகாஶதாம்**

**भजति** = அடைகிறன்.

**ப⁴ஜதி**

ஒன்றுக்குள் ஒன்றுயிருக்கிற அன்னமயம், பிராணமயம், மனோமயம், விக்ஞானமயம், ஆனந்தமயம், என்கிற ஐந்து கோசங்களையும் பிரித்துப்பார்த்தால் ஆத்மா பிரகாசமாகத் தெரியும். **(8)**

**(அ) அன்னமயகோசம் (சரீரம்) ஆத்மாவல்ல: -**

**वपुरिदमन्नमयाख्यः कोशो नात्मा जडो घटप्रायः ।**
**प्रागुत्पत्तेः पश्चात् तदभावस्यापि दृश्यमानत्वात् ॥ ९ ॥**

**வபுரித³மன்னமயாக்²ய꞉ கோஶோ நாத்மா ஜடோ³ க⁴டப்ராய꞉ ।**
**ப்ராகு³த்பத்தே꞉ பஶ்சாத் தத³பா⁴வஸ்யாபி த்³ருஶ்யமானத்வாத் ॥ 9 ॥**

**इदं** = இந்த,

**இத³ம்**

**वपु** = சரீரம்,

**வபு**

**अन्नमयाख्यः** = அன்னமயம் என்று பெயருள்ள,

**அன்னமயாக்²ய꞉**

**कोशः** = கோசம்,

**கோஶ꞉**

**घटप्रायः** = குடத்திற்கொப்பான,

**க⁴டப்ராய꞉**

**जडः** = ஜடமான (இது),

**ஜட³꞉**

**उत्पत्तः प्राक्** = உண்டாவதற்கு முன்னாலும்,

**உத்பத்த꞉ ப்ராக்**

**पश्चात्** = நாசத்திற்குப் பின்னாலும்,

**பஶ்சாத்**

**तदभावस्यापि** = அதன் இல்லாமையும்,

**தத³பா⁴வஸ்யாபி**

**दृश्यमानत्वात्** = அறியப்படுகிறபடியால்,

**த்³ருஶ்யமானத்வாத்**

**न आत्मा** = ஆத்மா அல்ல.

**ந ஆத்மா**

இந்த சரீரம்தான் அன்னமயம் என்கிற கோசம். இது குடம் மாதிரியே ஜடமாயிருப்பதால் (ஞானஸ்வரூபியான) ஆத்மா அல்ல. மேலும் இது பிறப்பதற்கு முன்னுலும் (இறந்ததற்குப்) பின்னுலும் இது இல்லையென்று அறியப்படுகிறபடியால் (இது நித்யஸ்வரூபியான ஆத்மா அல்ல.)

[ஆத்மா சேதனம், சரீரமோ அசேதனம் (ஜடம்). பிறப்பு இறப்பு இல்லாமல் எப்பொழுதும் உள்ளது ஆத்மா. உண்டாகி அழிந்துபோகும் சரீரமோ உத்பத்திக்கு முன்பும் நாசத்திற்குப் பின்னும் இல்லை. ஆகவே ஒன்றுக்கொன்று எதிரிடையாயிருப்பதால் அன்னமய கோசமான சரீரம் ஆத்மாவல்ல].

**(அ) பிராணமயகோசம் ஆத்மாவல்ல: -**

**कोशः प्राणमयोऽयं वायुविशेषो वपुष्यवच्छिन्नः ।**
**अस्य कथमात्मता स्यात् क्षुत्तृष्णाभ्यामुपेयुषः पीडाम् ॥ १० ॥**

**கோஶ: ப்ராணமயோ(அ)யம் வாயுவிஶேஷோ வபுஷ்யவச்சி²ன்ன: ।**
**அஸ்ய கத²மாத்மதா ஸ்யாத் க்ஷுத்த்ருஷ்ணாப்⁴யாமுபேயுஷ: பீடா³ம் ॥ 10 ॥**

**वपुपि** = சரீரத்தில்,
**வபுபி**

**अवच्छिन्नः** = கட்டுப்பட்ட,
**அவச்சி²ன்ன:**

**वायुविशेषः** = ஒர்வாயுதான்,
**வாயுவிஶேஷ:**

**अयं** = இந்த,
**அயம்**

**प्राणमयः कोशः** = பிராணமயகோசம்,
**ப்ராணமய: கோஶ:**

**क्षुत्तृष्णाभ्यां** = பசி தாகங்களால்,
**க்ஷுத்த்ருஷ்ணாப்⁴யாம்**

**पीडां** = துன்பத்தை,
**பீடா³ம்**

**उपेयुषः** = அடைகின்ற,
**உபேயுஷ:**

**अस्य** = இந்த பிராணனுக்கு,
**அஸ்ய**

**आत्मता** = ஆத்மத்தன்மை,
**ஆத்மதா**

**कथं स्यात्** = எப்படி ஏற்படும்?
**கத²ம் ஸ்யாத்**

இந்த பிராணமய கோசம் சரீரத்திற்குள் அடைபட்ட ஒருவித வாயுதான். இது பசி, தாஹங்களால் பீடிக்கப்படுகிறது. இது எப்படி (வியாபகமாயும் பசி தாஹத்திற்கு மேல்பட்டதாயுமுள்ள) ஆத்மாவாகும்?

[பஞ்சபூதங்களில் ஒன்ருன வாயுவின் அம்சம் பிராணன். ஆத்மாவோ பஞ்சபூத ங்களுக்கு அப்பால்பட்டது. பிராணன் சரீரத்திற்குள் உள்ளதே தவிற வெளியில் இல்ஸெ. ஆத்மாவோ எங்கும் உள்ளது. பிராணனுக்கு பசிதாஹங்கள் உண்டு. ஆத்மா வுக்கு அவை கிடையாது. ஆகையால் பிராணனும் ஆத்மாவல்ல] **(10)**

**(அ) மனோமயகோசம் ஆத்மாவல்ல: -**

**कुरुते वपुष्यहंतां गेहादौ यः करोति ममतां च ।**
**रागद्वेषविधेयो नासावात्मा मनोमयः कोशः ॥ ११ ॥**

**குருதே வபுஷ்யஹந்தாம் கே³ஹாதௌ³ ய꞉ கரோதி மமதாம் ச ।**
**ராக³த்³வேஷவிதே⁴யோ நாஸாவாத்மா மனோமய꞉ கோஶ꞉ ॥ 11 ॥**

**यः** = எவன்,
**ய꞉**
**वपुषि:** = உடலில்,
**வபுஷி꞉**
**अहंतां** = 'நான்' என்ற எண்ணத்தை,
**அஹந்தாம்**
**कुरुते** = செய்கிறனே,
**குருதே**
**गेहादौ** = வீடு முதலியவற்றில்
**கே³ஹாதௌ³**
**ममतां च** = ''என்னுடையது' என்ற எண்ணத்தையும்,
**மமதாம் ச**
**करोति** = செய்கிறனே,
**கரோதி**
**रागद्वेषविधेय:** = விருப்பு வெறுப்புகளுக்கு உட்பட்ட,
**ராக³த்³வேஷவிதே⁴ய꞉**
**असौ** = அந்த,
**அஸௌ**

**मनोमयः कोशः** = மனோமயகோசம்,

**மனோமய: கோஶ:**

**न आत्मा** = ஆத்மா அல்ல.

**ந ஆத்மா**

சரீரத்தில் 'நான்' என்கிற எண்ணத்தையும், வீடு முதலானவற்றில் 'என்னுடையது' என்கிற எண்ணத்தையும் செய்கிறதாயும் விருப்பு வெறுப்புகளுக்கு உள்பட்டதாயுமிருக்கிற இந்த மனோமய கோசம் (இவைகளால் கொஞ்சமேனும் தீண்டப்படாத) ஆத்மா அல்ல.

[மனமானது சரீரத்தை நான் என்றும் வீடு, மனைவி முதலியவற்றை எனது என்றும் அபிமானம் கொள்கிறது. இரண்டற்ற ஆத்மாவுக்கோ அபிமானம் என்பதே கிடையாது. மேலும் தனக்கு வேண்டியவற்றில் விருப்பும், வேண்டாதவற்றில் வெறுப்பும் கொள்கிறது மனம். ஆத்மாவுக்கோ ராகத்வேஷங்கள் கிடையாது. கிடையாது. ஆதலால் மனமும் ஆத்மாவல்ல.] **(11)**

**(அ) விக்ஞானமயகோசம் ஆத்மாவல்ல: -**

**सुप्तौ स्वयं विलीना बोधे व्याप्ता कलेबरं सकलम् ।**
**विज्ञानशब्दवाच्या चित्प्रतिबिम्बो न बुद्धिरण्यात्मा ॥ १२ ॥**

**ஸுப்தௌ ஸ்வயம் விலீனா போ³தே⁴ வ்யாப்தா கலேப³ரம் ஸகலம் ।**
**விஜ்ஞானஶப்³த³வாச்யா சித்ப்ரதிபி³ம்போ³ ந பு³த்³தி⁴ரண்யாத்மா ॥ 12 ॥**

**सुप्तौ** = தூக்கத்தில்,

**ஸுப்தௌ**

**स्वयं** = தானாகவே,

**ஸ்வயம்**

**विलीना** = மறைந்து விடுகிறதும்,

**விலீனா**

**बोधे** = விழிப்பில்,

**போ³தே⁴**

**सकलं कलेबरं** = சரீரம் முழுவதும்,

**ஸகலம் கலேப³ரம்**

**व्याप्ता** = பரவியிருக்கிறதும்,

**வ்யாப்தா**

**चित्प्रतिबिम्बः** = சைதன்யத்தின் பிரதிபிம்பமாக உள்ளதும்,

**சித்ப்ரதிபி³ம்ப³:**

| | | |
|---|---|---|
| **विज्ञानशब्दवाच्या** **விஜ்ஞானஶப்³த³வாச்யா** | = | 'விஜ்ஞானம்' என்ற சொல்லால் கூறப்படுகிறதுமான, |
| **बुद्धिरपि** **பு³த்³தி⁴ரபி** | = | புத்தியும், |
| **न आत्मा** **ந ஆத்மா** | = | ஆத்மா அல்ல. |

விக்ஞான சப்தத்திஞல் சொல்லப்படுகிற புத்தி சைதன்யத்தின் பிரதிபிம்பமே யாகும். அது தூங்கும்போது தாஞகவே லயத்தை அடைந்து விடுகிறது. விழித்திருக்கும் போது சரீரம் பூராவையும் வியாபித்திருக்கிறது. இதுவும் கூட (சைதன்ய ஸ்வரூபமாயும் ஸர்வ வியாபகமாயுமுள்ள) ஆத்மா அல்ல.

[சைதன்ய பிரதிபிம்பத்துடன் கூடிய புத்திதான் விஞ்ஞானமய கோசம் என்பது இது விழித்துக்கொண்டிருக்கும் பொழுது சரீரம் முழுவதும் பரவியிருப்பதால் எல்லா உணர்ச்சிகளும் ஏற்படுகின்றன. தூக்கத்தில் இது லயமடைந்து விடுவதால் நமக்கு ஒன்றும் தெரிவதில்லை. ஸர்வ வியாபகமாயும் எப்பொழுதும் ஞான ஸ்வரூபமாயுமுள்ள ஆத்மாவாக எப்படி புத்தி ஆகமுடியும்?] **(12)**

**(அ) ஆனந்தமயகோசம் ஆத்மாவல்ல: -**

**सुप्तिगतैः सुखलेशैरभिमनुते यः सुखी भवामीति ।**
**आनन्दकोशनामा सोऽहंकारः कथं भवेदात्मा ॥ १३ ॥**

**ஸுப்திக³தை꞉ ஸுக²லேஶைரபி⁴மனுதே ய꞉ ஸுகீ² ப⁴வாமீதி ।**
**ஆனந்த³கோஶநாமா ஸோ(அ)ஹங்கார꞉ கத²ம் ப⁴வேதா³த்மா ॥ 13 ॥**

| | | |
|---|---|---|
| **सुप्तिगतैः** **ஸுப்திக³தை꞉** | = | தூக்கத்திலுள்ள, |
| **सुखलेशैः** **ஸுக²லேஶை:** | = | மிகவும் ஸ்வல்பமான ஸுகங்களால், |
| **यः** **ய꞉** | = | எவன், |
| **सुखी भवामीति** **ஸுகீ² ப⁴வாமீதி** | = | ஸுகமுள்ளவனாக இருக்கிறேன் என்று, |
| **अभिमनुते** **அபி⁴மனுதே** | = | அபிமானம் கொள்கிறுனே, |
| **सः** **ஸ꞉** | = | அந்த, |

**आनन्दकोशनामा** = ஆனந்தமய கோசம் என்ற பெயருள்ள,

**ஆனந்த³கோஶநாமா**

**अहंकार:** = அஹங்காரம்,

**அஹங்காரஃ**

**कथं** = எப்படி,

**கத²ம்**

**आत्मा** = ஆத்மாவாக,

**ஆத்மா**

**भवेत्** = ஆகும்?

**ப⁴வேத்**

தூக்கத்தில் தோன்றும் ஸுகலேசங்களை வைத்துக் கொண்டு நான் ஸுகியாயி ருக்கிறேன் என்று அபிமானிக்கிற அஹங்காரம் ஆனந்தமய கோசம் என்ற பெயருள் ளது. அது எப்படி (நிரதிசயமான ஆனந்தஸ்வரூபியான) ஆத்மாவாகும்?

[நல்ல தூக்கத்தில் ஸுகத்தை அனுபவிக்கிறவன் ஆனந்தமயன். ஸுஷுப்தி ஸுகம் மிகவும் ஸ்வல்பம். அதுவும் அப்பொழுது நன்றாகத்தெரிவதில்லை. விழித்துக் கொண்டபிறகுதான் ஞாபகத்திற்கு வருகிறது. ஆத்மாவோ எல்லையற்ற ஆனந்த ப்ரகாசஸ்வரூபம். அதனுல் ஆனந்த மயனும் ஆத்மாவல்ல.] **(13)**

## ஆத்மா ஞான விஷயமல்ல: -

**यः स्फुरति बिम्बभूतः स भवेदानन्द एव सकलात्मा ।**
**प्रागूर्ध्वमपि च सत्त्वादविकारित्वादबाध्यमानत्वात् ॥ १४ ॥**

**யஃ ஸ்பு²ரதி பி³ம்ப³பூ⁴தஃ ஸ ப⁴வேதா³னந்த³ ஏவ ஸகலாத்மா ।**
**ப்ராகூ³ர்த்⁴வமபி ச ஸத்த்வாத³விகாரித்வாத³பா³த்⁴யமானத்வாத் ॥ 14 ॥**

**यः** = எது,

**யஃ**

**बिम्बभूतः** = பிம்பமாக இருந்து கொண்டு,

**பி³ம்ப³பூ⁴தஃ**

**स्फुरति** = பிரகாசிக்கிறதோ,

**ஸ்பு²ரதி**

**सः** = அந்த,

**ஸ:**

**आनन्द एव** = ஆனந்தம் தான்,

**ஆனந்த³ ஏவ**

**प्राक्** = முன்னுலும்,

**ப்ராக்**

**ऊर्ध्वमपि** = பின்னுலும்,

**ஊர்த்⁴வமபி**

**सत्वात्** = இருப்பதாலும்,

**ஸத்வாத்**

**अविकारित्वात्** = மாறுதல் அடையாததாலும்,

**அவிகாரித்வாத்**

**अबाध्यमानत्वात्** = பாதிக்கப்படாமலிருப்பதாலும்,

**அபா³த்⁴யமானத்வாத்**

**सकलात्मा** = எல்லாவற்றிற்கும் ஆத்மாவாக,

**ஸகலாத்மா**

**भवेत्** = ஆகும்.

**ப⁴வேத்**

எது (பிரதிபிம்பமாயில்லாமல்) பிம்பமாகவே இருந்து கொண்டு, (ஆனந்தமய மாயில்லாமல்) ஆனந்தமாகவே இருந்து கொண்டு, (அளவிற்கு உட்படாமல்) எல்லா வற்றிற்கும் ஆத்மாவாக பிரகாசிக்கிறதோ (அதுவே தான் ஆத்மா). முன்னுலேயும் பிற்பாடும் இருந்து வருவதனுலும், எவ்வித மாறுதலுமற்றிருப்பதனுலும், எப்பொழு தும் பாதிக்கப்படாமலிருப்பதனாலும் (அதுவேதான். ஆத்மா,)

**अन्नमयादेरस्मादपरं यदि नानुभूयते किंचित् ।**
**अनुभविताऽन्नमयादेरस्तीत्यस्मिन् न कश्चिदपलापः ॥ १५ ॥**

**அன்னமயாதே³ரஸ்மாத³பரம் யதி³ நானுபூ⁴யதே கிஞ்சித் ।**
**அனுப⁴விதா(அ)ன்னமயாதே³ரஸ்தீத்யஸ்மின் ந கஶ்சித³பலாப: ॥ 15 ॥**

**अस्मात्** = இந்த,

**அஸ்மாத்**

**अन्नमयादेः** = அன்னமயம் முதலியவற்றைக்காட்டிலும்,

**அன்னமயாதே³**

**अपरं किंचित्** = வேறுஒன்றும்,

**அபரம் கிஞ்சித்**

**यदि नानुभूयते** = அனுபவிக்கப்படாவிட்டாலும்,

**யதி³ நானுபூ⁴யதே**

**अन्नमयादेः** = அன்னமயம் முதலியவற்றை,

**அன்னமயாதே**

**अनुभविता** = அனுபவிக்கிறவன்,
**அனுப⁴விதா**
**अस्ति** = இருக்கிறுன்,
**அஸ்தி**
**इत्यस्मिन्** = என்ற இந்த விஷயத்தில்,
**இத்யஸ்மின்**
**कश्चित्** = ஒருவிதமான,
**கஶ்சித்**
**अपलापः** = மறுப்பும்,
**அபலாபঃ**
**न** = கிடையாது.
**ந**

இந்த அன்னமயம் முதலான் (ஐந்து கோசங்களுக்கு) வேறுக யாதொன்றும் அனுபவிக்கப்படவில்லையே யென்றுலும், அன்னமயம் முதலானவைகளை அனுபவிக் கிறவனுக ஒருவன் இருக்கிறவிஷயத்தில் எவ்வித மறுப்புக்கும் இடமில்லை.

[அன்னமயம் முதலான ஐந்து கோசங்களையும் நாம் நன்கு அறிந்து கொள்வதால் இவைகளை அறிகிறவன் ஒருவன் இவைகளைக்காட்டிலும் வேறுக இருக்க வேண்டு மென்று தெரிகிறது.] **(15)**

**स्वयमेवानुभवत्वाद्यद्यप्येतस्य नानुभाव्यत्वम् ।**
**सकृदप्यभावशङ्का न भवेद्बोधस्वरूपसत्तायाः ॥ १६ ॥**

**ஸ்வயமேவானுப⁴வத்வாத்³யத்³யப்யேதஸ்ய நானுபா⁴வ்யத்வம் ।**
**ஸக்ருத³ப்யபா⁴வஶங்கா ந ப⁴வேத்³போ³த⁴ஸ்வரூபஸத்தாயாঃ ॥ 16 ॥**

**स्वयमेव** = தானே,
**ஸ்வயமேவ**
**अनुभवत्वात्** = அநுபவரூபமாயிருப்பதால்,
**அனுப⁴வத்வாத்**
**एतस्य** = இந்த ஆத்மாவிற்கு,
**ஏதஸ்ய**
**अनुभाव्यत्वं** = அனுபவிக்கத்தகுந்த வனாயிருக்கும்
**அனுபா⁴வ்யத்வம்** தன்மை,
**यद्यपि न** = இல்லாவிட்டாலும்,
**யத்³யபி ந**
**वोधस्वरूपसत्तायाः** = ஞானஸ்வரூபமான ஸத்தைக்கு,
**வோத⁴ஸ்வரூபஸத்தாயாঃ**

| | | |
|---|---|---|
| **सकृदपि**<br>**ஸக்ருத³பி** | = | ஒரு தடவையாவது, |
| **अभावशङ्का**<br>**அபா⁴வஶங்கா** | = | இல்லையோ என்ற ஸந்தேஹம், |
| **न भवेत्**<br>**ந ப⁴வேத்** | = | ஏற்படாது. |

இவன் தானே அநுபவரூபமாயிருப்பதால் இவனுக்கு அனுபவிக்கப்படும் தன்மை கிடையாதென்பது வாஸ்தவமானாலும் ஞான ஸ்வரூபனாக இருப்பவனுக்கு இருப்பு உண்டா இல்லையா என்ற ஸந்தேஹம் ஒருவிதத்திலும் ஏற்பட முடியாது.

[எல்லாவற்றையும் அறியும் ஆத்மா வேறென்றால் அறியப்படாததால் அதை இல்லை என்று சொல்லமுடியாது. ஸ்த்தாகவும் சித்தாகவும் தானே விளங்குகின்ற ஆத்மா எப்படி இல்லாமலிருக்கக்கூடும்?] **(16)**

## अनुभवति विश्वमात्मा विश्वेनासौ न चानुभूयेत ।
## न खलु प्रकाश्यतेऽसौ विश्वमशेषं प्रकाशयन् भानुः ॥ १७ ॥

**அனுப⁴வதி விஶ்வமாத்மா விஶ்வேனாஸௌ ந சானுபூ⁴யேத ।**
**ந க²லு ப்ரகாஶ்யதே(அ)ஸௌ விஶ்வமஶேஷம் ப்ரகாஶயன் பா⁴னுः ॥ 17 ॥**

| | | |
|---|---|---|
| **आत्मा**<br>**ஆத்மா** | = | ஆத்மா, |
| **विश्वं**<br>**விஶ்வம்** | = | பிரபஞ்சத்தை, |
| **अनुभवति**<br>**அனுப⁴வதி** | = | அனுபவிக்கிறான், |
| **असौ**<br>**அஸௌ** | = | அந்த ஆத்மா, |
| **विश्वेन**<br>**விஶ்வேன** | = | பிரபஞ்சத்தினால், |
| **न च अनुभूयेत**<br>**ந ச அனுபூ⁴யேத** | = | அனுபவிக்கப்படுவதில்லை, |
| **अशेषं विश्वं**<br>**அஶேஷம் விஶ்வம்** | = | பிரபஞ்சம் முழுவதையும், |
| **प्रकाशयन्**<br>**ப்ரகாஶயன்** | = | பிரகாசித்துக்கொண்டிருக்கிற, |
| **असौ भानुः**<br>**அஸௌ பா⁴னுः** | = | அந்த ஸூரியன், |

| | | |
|---|---|---|
| **न खलु प्रकाश्यते** | = | (வேறென்றால்) பிரகாசிக்கப்படுகிற |
| **ந க²லு ப்ரகாஶ்யதே** | | தில்லையல்லவா! |

பிரபஞ்சத்தை ஆத்மா அனுபவிக்கிறார். பிரபஞ்சத்தினால் அவர் அனுபவிக்கப் படுவதில்லை. பிரபஞ்சம் பூராவையும் பிரகாசிக்கும்படிச் செய்யும் இந்த ஸூர்யன் பிரகாசிக்கப்படுகிறதில்லையே!

[தான் வேறென்றால் அறியப்படாவிட்டாலும் எல்லாவற்றையும் அறிகின்ற ஆத்மா ஒன்று உள்ளது என்பதற்கு திருஷ்டாந்தம் ஸூரியன். எல்லாவற்றையும் காட்டுகின்ற ஸூர்யனைப் பார்க்க வேறு வெளிச்சத்தைத் தேடுவதில்லை. அது தானே தான் பிரகாசிக்கிறது.] **(17)**

**(அ) ப்ரஹ்மம் அபரோக்ஷம்: -**

**तदिदं तादृशमीदृशमेतावत्तावदिति च यन्न भवेत् ।**
**ब्रह्म तदित्यवधेयं नो चेद्विषयो भवेत् परोक्षं च ॥ १८ ॥**

**ததி³த³ம் தாத்³ருஶமீத்³ருஶமேதாவத்தாவதி³தி ச யன்ன ப⁴வேத் ।**
**ப்³ரஹ்ம ததி³த்யவதே⁴யம் நோ சேத்³விஷயோ ப⁴வேத் பரோக்ஷ ச ॥ 18 ॥**

| | | |
|---|---|---|
| **तत्**<br>**தத்** | = | அது, |
| **इदं**<br>**இத³ம்** | = | இது, |
| **तादृशं**<br>**தாத்³ருஶம்** | = | அப்படிப்பட்டது, |
| **ईदृशं**<br>**ஈத்³ருஶம்** | = | இப்படிப்பட்டது, |
| **एतावत्**<br>**ஏதாவத்** | = | இவ்வளவு, |
| **तावत्**<br>**தாவத்** | = | அவ்வளவு, |
| **इति च**<br>**இதி ச** | = | என்பதாக, |
| **यत्**<br>**யத்** | = | எது, |
| **न भवेत्**<br>**ந ப⁴வேத்** | = | ஆகாதோ, |

| | | |
|---|---|---|
| **तत्**<br>**தத்** | = | அது, |
| **ब्रह्म**<br>**ப்3ரஹ்ம** | = | ப்ரஹ்மம், |
| **इति**<br>**இதி** | = | என்று, |
| **अवधेयं**<br>**அவதே4யம்** | = | தெரிந்து கொள்ள வேண்டும், |
| **नो चेत्**<br>**நோ சேத்** | = | இப்படியில்லாவிட்டால் (ப்ரஹ்மம்), |
| **विषयः**<br>**விஷய:** | = | விஷயமாகவும் (அறியப்படும் வஸ்துவாகவும்), |
| **परोक्षं च**<br>**பரோக்ஷம் ச** | = | பரோக்ஷமாகவும், |
| **भवेत्**<br>**ப4வேத்** | = | ஆகிவிடும். |

"அது, இது, அப்படிப்பட்டது, இப்படிப்பட்டது, இவ்வளவு, அவ்வளவு" என்று எது ஆகாதோ அதுவே பிரஹ்மமென்று அறியவேண்டும். அப்படியில்லாமலிருந்தால் (அது, இது, முதலான வகையில் சொல்லக்கூடியதாயிருந்தால்) ஆத்மா (இந்திரியம் மனஸ் முதலானதுகளால் கிரஹிக்கக்கூடிய) விஷயமாகிவிடும்; தவிரவும் வெளிப் பதார்த்தமாகவும் ஆகிவிடும். **(18)**

**इदमिदमिति प्रतीते वस्तुनि सर्वत्र बाध्यमानेऽपि ।**
**अनिदमबाध्यं तत्त्वं तस्मादेतस्य न परोक्षत्वम् ॥ १९ ॥**

**இத3மித3மிதி ப்ரதீதே வஸ்துனி ஸர்வத்ர பா3த்4யமானே(அ)பி ।**
**அனித3மபா3த்4யம் தத்த்வம் தஸ்மாதே3தஸ்ய ந பரோக்ஷத்வம் ॥ 19 ॥**

| | | |
|---|---|---|
| **इदमिदमिति**<br>**இத3மித3மிதி** | = | இது இது என்று, |
| **प्रतीते**<br>**ப்ரதீதே** | = | தோன்றுகிற, |
| **सर्वत्र वस्तुनि**<br>**ஸர்வத்ர வஸ்துனி** | = | எல்லாப்பொருளும், |
| **बाध्यमानेऽपि**<br>**பா3த்4யமானே(அ)பி** | = | பாதிக்கப்படுகிற போதிலும், |
| **अनिदं**<br>**அனித3ம்** | = | 'இது' வல்லாத, |

| | | |
|---|---|---|
| **तत्वं** <br> **தத்வம்** | = | தத்வம், |
| **अबाध्यं** <br> **அபா[3]த்[4]யம்** | = | பாதிக்கப்படாதது, |
| **तस्मात्** <br> **தஸ்மாத்** | = | ஆகையால், |
| **एतस्य** <br> **ஏதஸ்ய** | = | இதற்கு, |
| **न परोक्षत्वं** <br> **ந பரோக்ஷத்வம்** | = | பரோக்ஷமாயிருக்கும் தன்மை கிடையாது. |

"இது, இது" என்று தோன்றுகிற எல்லா வஸ்துக்களும் பாதிக்கப்பட்டபோதிலும் கூட "இது" வல்லாததான தத்வம் பாதிக்கப்பட மாட்டாது. அதனுலேயே இதற்கு வெளிப்பதார்த்தமாயிருக்கும் தன்மை கிடையாது.

**नावेद्यमपि परोक्षं भवति ब्रह्म स्वयंप्रकाशत्वात् ।**
**सत्यं ज्ञानमनन्तं ब्रह्मेत्येतस्य लक्षणं प्रथते ॥ २० ॥**

**நாவேத்[3]யமபி பரோக்ஷம் ப[4]வதி ப்[3]ரஹ்ம ஸ்வயம்ப்ரகாஶத்வாத் ।**
**ஸத்யம் ஜ்ஞானமனந்தம் ப்[3]ரஹ்மேத்யேதஸ்ய லக்ஷணம் ப்ரத[2]தே ॥ 20 ॥**

| | | |
|---|---|---|
| **ब्रह्म** <br> **ப்[3]ரஹ்ம** | = | ப்ரஹ்மமானது, |
| **स्वयंप्रकाशत्वात्** <br> **ஸ்வயம்ப்ரகாஶத்வாத்** | = | தானுகவேபிரகாசிக்கிறபடியால், |
| **अवेद्यमपि** <br> **அவேத்[3]யமபி** | = | (மற்றென்றுல்) அறியக் கூடாததாக இருந்தபோதிலும், |
| **परोक्षं** <br> **பரோக்ஷம்** | = | பரோக்ஷமாக, |
| **न भवति** <br> **ந ப[4]வதி** | = | ஆவதில்லை, |
| **सत्यं** <br> **ஸத்யம்** | = | ஸத்யமாகவும், |
| **ज्ञानं** <br> **ஜ்ஞானம்** | = | ஞான ஸ்வரூபமாகவும், |
| **अनन्तं** <br> **அனந்தம்** | = | (தேசகாலவஸ்துக்களால்) எல்லையற்றதாகவும் உள்ளது, |

| | | |
|---|---|---|
| **ब्रह्म**<br>**ப்[3]ரஹ்ம** | = | ப்ரஹ்மம், |
| **इति**<br>**இதி** | = | என்று, |
| **एतस्य**<br>**ஏதஸ்ய** | = | இதனுடைய, |
| **लक्षणं**<br>**லக்ஷணம்** | = | லக்ஷணம், |
| **प्रथते**<br>**ப்ரத[2]தே** | = | பிரஸித்தமாக இருக்கிறது. |

பிரஹ்மமானது ஞானத்திற்கு விஷயமில்லாமல் போனாலும் அறியப்படாத வெளிப்பதார்த்தமாகிவிடாது. ஏனென்றால் அது (கருவிகளின் உதவியை எதிர்பார்க்காமல்) தானாகவே பிரகாசிக்கும் தன்மையுடையது. "பிரஹ்மமானது ஸத்ய வஸ்து, ஞானஸ்வரூபம், எல்லையற்றது." என்று இதன் லக்ஷணம் பிரஸித்தமானது.

[தன்னைக்காட்டிலும் வேறாக உள்ள பொருள் தான் முதலில் பரோக்ஷமாக இருந்து பிறகு அதைக் கருவிகளால் அறிந்துகொண்டதும் அபரோக்ஷமாக ஆகும். பின்னால் இது மறைந்தும் போகும். தானாகவே இருக்கும் ஆத்மா வேறென்றால் அறியப்படுகிறதில்லை. ஆனாலும் ஆத்மா ஸ்வயம்ப்ரகாசமானதால் எப்பொழுதும் அபரோக்ஷமாகவும் மறைந்துபோகாமலும் இருக்கிறது.] **(20)**

**(அ) ஜீவனும் ஈசுவரனும் உண்மையில் ப்ரஹ்மமே: -**

**सति कोशशक्त्युपाधौ संभवतस्तस्य जीवतेश्वरते ।**
**नो चेत् तयोरभावाद्विगतविशेषं विभाति निजरूपम् ॥ २१ ॥**

**ஸதி கோஶஶக்த்யுபாதௌ[4] ஸம்ப[4]வதஸ்தஸ்ய ஜீவதேஶ்வரதே ।**
**நோ சேத் தயோரபா[4]வாத்[3]விக[3]தவிஶேஷம் விபா[4]தி நிஜரூபம் ॥ 21 ॥**

| | | |
|---|---|---|
| **तस्य**<br>**தஸ்ய** | = | அந்த ப்ரஹ்மத்திற்கு, |
| **कोशशक्त्युपाधौ सति**<br>**கோஶஶக்த்யுபாதௌ[4] ஸதி** | = | ஐந்து கோசங்கள், மாயாசக்தி என்ற உபாதிகள் இருக்குமேயானால், |
| **जीवतेश्वरते**<br>**ஜீவதேஶ்வரதே** | = | (முறையே) ஜீவத்தன்மையும், ஈசுவரத்தன்மையும், |
| **संभवत:**<br>**ஸம்ப[4]வத:** | = | ஏற்படுகின்றன, |

| | | |
|---|---|---|
| **नो चेत्** <br> **நோ சேத்** | = | இல்லாவிட்டால், |
| **तयोः अभावात्** <br> **தயோ꞉ அபா⁴வாத்** | = | அந்த ஜீவன், ஈசுவரன் என்ற வேற்றுமைகள் இல்லாததால், |
| **विगतविशेषं** <br> **விக³தவிஶேஷம்** | = | விசேஷரூபங்கள் அற்றதாக, |
| **निजरूपं** <br> **நிஜரூபம்** | = | உண்மையான ஸ்வரூபம், |
| **विभाति** <br> **விபா⁴தி** | = | விளங்குகிறது. |

அந்த பிரஹ்மத்திற்கே பஞ்சகோசங்களாகிற உபாதி இருந்தால் ஜீவன் என்கிற தன்மையும், சக்தியென்ற உபாதி இருந்தால் ஈசுவரன் என்கிற தன்மையும் ஏற்படு கின்றன. அப்படியில்லையானல் (அதாவது அந்த இரண்டுவித உபாதிகளும் இல்லை யானல்) தனிப்படுத்திக்காட்டும் விசேஷம் போய்விட்டபடியால் ஜீவன், ஈசுவரன் என்ற வேற்றுமை விலகி வாஸ்தவமான சுத்த ஸ்வரூபம் நன்கு விளங்கும்,

[ஒரே சைதன்யம் பஞ்சகோசங்கள் என்னும் உபாதியால் ஜீவனுகவும், மாயா சக்தி உபாதியால் ஈசுவரனுகவும் தோன்றுகிறது. இந்த உபாதிகள் நீங்கிவிட்டால் வேற்றுமையற்றதாக சுத்த ப்ரஹ்மம் நன்கு பிரகாசிக்கும்.]

**सति सकलदृश्यबाधे न किमप्यस्तीति लोकसिद्धं चेत् ।**
**यन्न किमपीति सिद्धं ब्रह्म तदेवेति वेदतः सिद्धम् ॥ २२ ॥**

**ஸதி ஸகலத்³ருஶ்யபா³தே⁴ ந கிமப்யஸ்தீதி லோகஸித்³த⁴ம் சேத் ।**
**யன்ன கிமபீதி ஸித்³த⁴ம் ப்³ரஹ்ம ததே³வேதி வேத³த꞉ ஸித்³த⁴ம் ॥ 22 ॥**

| | | |
|---|---|---|
| **सकलदृश्यबाधे सति** <br> **ஸகலத்³ருஶ்யபா³தே⁴ ஸதி** | = | அறியப்படும் எல்லாப்பொருள்களும் பாதிக்கப்பட்டபொழுது, |
| **किमपि** <br> **கிமபி** | = | ஒன்றும், |
| **नास्ति** <br> **நாஸ்தி** | = | இல்லை, |
| **इति** <br> **இதி** | = | என்று, |
| **लोकसिद्धं चेत्** <br> **லோகஸித்³த⁴ம் சேத்** | = | லோகத்தில் பிரஸித்தமாக உள்ளதே என்றால், |
| **न किमप्यस्तीति** <br> **ந கிமப்யஸ்தீதி** | = | ஒன்றுமே இல்லை என்று, |

**यत् सिद्धं** = எது பிரஸித்தமாக உள்ளதோ,

**யத் ஸித்³த⁴ம்**

**तदेव** = அதுவே,

**ததே³வ**

**ब्रह्म** = ப்ரஹ்மம்,

**ப்³ரஹ்ம**

**इति** = என்று,

**இதி**

**वेदत:** = வேதத்தால்,

**வேத³த:**

**सिद्धं** = தீர்மானிக்கப்பட்டிருக்கிறது.

**ஸித்³த⁴ம்**

அனுபவிக்கப்படுவதெல்லாம் பாதிக்கப்பட்டபோது "ஒன்றுமேயில்லை" என்று உலகத்தில் பிரஸித்தமானதே யென்றால் "ஒன்றுமேயில்லை" என்று எது ஏற்படுகிற தோ அதுவே பிரஹ்மம் என்று வேதத்தில் தீர்மானம் செய்யப்பட்டிருக்கிறது.

[எல்லாப்பொருள்களும் மறைந்துவிட்டால் ஒன்றுமே இல்லையே, ப்ரஹ்ம மும் இல்லையே என்ற கேள்விக்கு ஒன்றுமே இல்லை என்று தெரிவதாலேயே அதை விளக்கிக்கொண்டு ப்ரஹ்மம் ப்ரகாசிக்கிறது என்பது பதில்.] **(22)**

## தத், த்வம், பதங்களின் இருவித அர்த்தம்: -

## एवं मतिरहितानां तच्चमसीत्यादिवाक्यचिन्तनया ।
## प्रतिभात्येष परोक्षवदात्मा प्रत्यक्प्रकाशमानोऽपि ॥ २३ ॥

**ஏவம் மதிரஹிதாநாம் தச்சமஸீத்யாதி³வாக்யசிந்தனயா ।**
**ப்ரதிபா⁴த்யேஷ பரோக்ஷவதா³த்மா ப்ரத்யக்ப்ரகாஶமானோ(அ)பி ॥ 23 ॥**

**एवं मतिरहितानां** = இப்பேற்பட்ட (முன் கூறப்பட்ட)

**ஏவம் மதிரஹிதாநாம்** ஞானம் இல்லாதவர்களுக்கு,

**तच्चमसीत्यादिवाक्यचिन्तनया** = 'தத்த்வமஸி' இது முதலான வாக்யங்களின்

**தச்சமஸீத்யாதி³வாக்யசிந்தனயா** பொருளைச் சிந்தனை செய்வதால்

**एप:** = இந்த,

**ஏப:**

**आत्मा** = ஆத்மா,

**ஆத்மா**

**प्रत्यक्प्रकाशमानोऽपि** = உள்ளே தானாக பிரகாசித்துக்

**ப்ரத்யக்ப்ரகாஶமானோ(அ)பி** கொண்டிருந்த போதிலும்,

| | | |
|---|---|---|
| **परोक्षवत्**<br>**பரோக்ஷவத்** | = | பரோக்ஷம்போல், |
| **प्रतिभाति**<br>**ப்ரதிபா⁴தி** | = | தோன்றுகிறது. |

இவ்வித ஞானமில்லாதவர்களுக்கு ஆத்மா வாஸ்தவத்தில் உள்ளேயே பிரகாசித்துக்கொண்டிருந்தபோதிலும், **தத் த்வம் அஸி** ("நீ அது") முதலான வாக்யங்களை மட்டும் சிந்தனை செய்வதன் மூலம் வெளிப் பதார்த்தம்போல் தோன்றும்.

**तस्मात् पदार्थशोधनपूर्वं वाक्यस्य चिन्तयन्नर्थम् ।**
**देशिक दयाप्रभावादपरोक्षयति क्षणेन चात्मानम् ॥ २४ ॥**

**தஸ்மாத் பதா³ர்த²ஶோத⁴னபூர்வம் வாக்யஸ்ய சிந்தயன்னர்த²ம் ।**
**தே³ஶிக த³யாப்ரபா⁴வாத³பரோக்ஷயதி க்ஷணேன சாத்மானம் ॥ 24 ॥**

| | | |
|---|---|---|
| **तस्मात्**<br>**தஸ்மாத்** | = | ஆகையால், |
| **पदार्थशोधनपूर्वं**<br>**பதா³ர்த²ஶோத⁴னபூர்வம்** | = | (மஹாவாக்யத்தில் உள்ள) பதங்களின் அர்த்தத்தை முதலில் பரிசோதித்து, |
| **वाक्यस्य**<br>**வாக்யஸ்ய** | = | வாக்யத்தின், |
| **अर्थं**<br>**அர்த²ம்** | = | பொருளை, |
| **चिन्तयन्**<br>**சிந்தயன்** | = | சிந்தனம் செய்கிறவன், |
| **देशिकदयाप्रभावात्**<br>**தே³ஶிகத³யாப்ரபா⁴வாத்** | = | ஆசார்யருடைய கிருபையியின் மஹிமையால், |
| **क्षणेन च**<br>**க்ஷணேன ச** | = | ஒரு க்ஷணத்திலேயே, |
| **आत्मानं**<br>**ஆத்மானம்** | = | ஆத்மஸ்வரூபத்தை, |
| **अपरोक्षयति**<br>**அபரோக்ஷயதி** | = | நேரில் தெரிந்து கொள்கிறான். |

ஆகையினால் வார்த்தைகளுடைய அர்த்தத்தை சோதித்துத் தெரிந்துகொண்ட பின்பு (அவ்வார்த்தைகளின் ஸமுதாயமான) வாக்யத்தின் அர்த்தத்தை அநுஸந்தானம் செய்துகொண்டு குருநாதருடைய கருணையின் பிரபாவத்தினால் ஒரு க்ஷணத்திலேயே ஆத்மாவை ஸாக்ஷாத்கரிப்பான். **(24)**

**(அ) த்வம்பத வாச்யார்த்தம்: -**

## देहेन्द्रियादिधर्मानात्मन्यारोपयन्नभेदेन ।
## कर्तृत्वाद्यभिमानी बोधः स्यात् त्वंपदस्य वाच्योऽर्थः ॥ २५ ॥

**தே3ஹேந்த்3ரியாதி3த4ர்மாநாத்மன்யாரோபயன்னபே4தே3ன ।**
**கர்த்ருத்வாத்3யபி4மானீ போ3த4: ஸ்யாத் த்வம்பத3ஸ்ய வாச்யோ(அ)ர்த2: ॥ 25 ॥**

| | | |
|---|---|---|
| **देहेन्द्रियादिधर्मान्** **தே3ஹேந்த்3ரியாதி3த4ர்மான்** | = | தேஹம், இந்திரியம் முதலானவற்றின் தர்மங்களை, |
| **अभेदेन** **அபே4தே3ன** | = | வேற்றுமையில்லாமல், |
| **आत्मनि** **ஆத்மனி** | = | தன்னிடம், |
| **आरोपयन्** **ஆரோபயன்** | = | ஆரோபணம் செய்து கொண்டு, |
| **कर्तृत्वाद्यभिमानी** **கர்த்ருத்வாத்3யபி4மானீ** | = | செய்கிறதன்மை முதலானவைகள் தன்னிடமிருப்பதாக நினைக்கிற, |
| **बोधः** **போ3த4:** | = | சைதன்யம், |
| **त्वंपदस्य** **த்வம்பத3ஸ்ய** | = | (மஹா வாக்யத்திலுள்ள) த்வம்பதத்தின், |
| **वाच्यः** **வாச்ய:** | = | வாச்யமான, |
| **अर्थः स्यात्** **அர்த2: ஸ்யாத்** | = | பொருளாக ஆகும். |

தேஹம். இந்திரியங்கள் முதலானவைகளின். தர்மங்களை வேற்றுமையில்லாமல் ஆத்மாவில் ஆரோபணம் செய்து, தானே (கர்த்தா, போக்தா, ஞாதா என்ற விதமாய்) செய்கிறவன் முதலானவன் போல் அபிமானித்துக்கொண்டிருக்கும் சைதன்யம் தான் த்வம் "நீ" என்கிற வார்த்தையின் வாச்யமான (ஸாதாரணமாய் சொல்லக் கூடிய) அர்த்தமாகும். **(25)**

**(அ) த்வம்பத லக்ஷ்யார்த்தம்: -**

## देहस्य चेन्द्रियाणां साक्षी तेभ्यो विलक्षणत्वेन ।
## प्रतिभाति योऽवबोधः प्रोक्तोऽसौ त्वंपदस्य लक्ष्योऽर्थः ॥ २६ ॥

**தே3ஹஸ்ய சேந்த்3ரியாணாம் ஸாக்ஷீ தேப்4யோ விலக்ஷணத்வேன ।**
**ப்ரதிபா4தி யோ(அ)வபோ3த4: ப்ரோக்தோ(அ)ஸௌ த்வம்பத3ஸ்ய லக்ஷ்யோ(அ)ர்த2: ॥ 26 ॥**

| | | |
|---|---|---|
| **देहस्य** | = | தேஹத்திற்கும், |
| **தே³ஹஸ்ய** | | |
| **इन्द्रियाणां च** | = | இந்திரியங்களுக்கும், |
| **இந்த்³ரியாணும் ச** | | |
| **साक्षी** | = | ஸாக்ஷியாக (நேரில் அறிகிறதாக), |
| **ஸாக்ஷீ** | | |
| **तेभ्यः** | = | அந்த தேஹம் இந்திரியம் |
| **தேப்⁴ய:** | | இவைகளைக்காட்டிலும், |
| **विलक्षणत्वेन** | = | வேறாக, |
| **விலக்ஷணத்வேன** | | |
| **यः अवबोधः** | = | எந்த சைதன்யம், |
| **ய: அவபோ³த⁴:** | | |
| **प्रतिभाति** | = | ப்ரகாசிக்கிறதோ, |
| **ப்ரதிபா⁴தி** | | |
| **असौ** | = | அது, |
| **அஸௌ** | | |
| **त्वंपदस्य** | = | த்வம்பதத்தின், |
| **த்வம்பத³ஸ்ய** | | |
| **लक्ष्योऽर्थः** | = | லக்ஷ்யமான அர்த்தமாக, |
| **லக்ஷ்யோ(அ)ர்த²:** | | |
| **प्रोक्तः** | = | சொல்லப்பட்டிருக்கிறது. |
| **ப்ரோக்த:** | | |

தேஹத்திற்கும் இந்திரியங்களுக்கும் ஸாக்ஷியாக இருந்துகொண்டு அவைகளுக்கு விருத்தமான லக்ஷணத்தோடு பிரகாசிக்கிற எந்த சைதன்யமோ, அது த்வம் "நீ" என்கிற வார்த்தையின் லக்ஷ்யமான (உள்கருத்தான) அர்த்தமாகும். **(26)**

**(அ) தத்பத வாச்யார்த்தம்: -**

**वेदावसानवाचा संवेद्यं सकलजगदुपादानम् ।**
**सर्वज्ञताद्युपेतं चैतन्यं तत्पदस्य वाच्योऽर्थः ॥ २७ ॥**

**வேதா³வஸானவாசா ஸம்வேத்³யம் ஸகலஜக³து³பாதா³னம் ।**
**ஸர்வஜ்ஞதாத்³யுபேதம் சைதன்யம் தத்பத³ஸ்ய வாச்யோ(அ)ர்த²: ॥ 27 ॥**

| | | |
|---|---|---|
| **वेदावसानवाचा** | = | வேதாந்த வாக்யத்தால், |
| **வேதா³வஸானவாசா** | | |

| | | |
|---|---|---|
| **संवेद्यं** <br> **ஸம்வேத்$^{3}$யம்** | = | நன்கு அறியத்தக்கதாயும், |
| **सकलजगदुपादानं** <br> **ஸகலஜக$^{3}$து$^{3}$பாதா$^{3}$னம்** | = | எல்லா உலகங்களுக்கும் உபாதான காரணமாயும், |
| **सर्वज्ञताद्युपेतं** <br> **ஸர்வஜ்ஞுதாத்$^{3}$யுபேதம்** | = | ஸர்வஜ்ஞுத்வம் முதலானவற்றுடன் கூடியதாயும் உள்ள, |
| **चैतन्यं** <br> **சைதன்யம்** | = | சைதன்யம், |
| **तत्पदस्य** <br> **தத்பத$^{3}$ஸ்ய** | = | தத்பதத்தின், |
| **वाच्यः** <br> **வாச்ய:** | = | வாச்யமான, |
| **अर्थः** <br> **அர்த$^{2}$:** | = | அர்த்தம். |

வேதாந்தவாக்கியத்திஞலேயே நன்கு அறியத்தக்கதாய் ஸகல ஜகத்திற்கும் உபாதான காரணமாய் ஸர்வக்ஞுத்தன்மை முதலான தர்மங்களோடு கூடினதுமான சைதன்யம் **தத்** "அது" என்கிற வார்த்தையின் வாச்யமான அர்த்தம். **(27)**

**(அ) தத்பத லக்ஷயார்த்தம்: -**

**विविधोपाधिविमुक्तं विश्वातीतं विशुद्धमद्वैतम् ।**
**अक्षरमनुभत्रवेद्य चैतन्यं तत्पदस्य लक्ष्योऽर्थः ॥ २८ ॥**

**விவிதோ$^{4}$பாதி$^{4}$விமுக்தம் விஶ்வாதீதம் விஶுத்$^{3}$த$^{4}$மத்$^{3}$வைதம் ।**
**அக்ஷரமனுப$^{4}$த்ரவேத்$^{3}$ய சைதன்யம் தத்பத$^{3}$ஸ்ய லக்ஷ்யோ(அ)ர்த$^{2}$: ॥ 28 ॥**

| | | |
|---|---|---|
| **विविधोपाधिविमुक्तं** <br> **விவிதோ$^{4}$பாதி$^{4}$விமுக்தம்** | = | பலவித உபாதிகளிலிருந்தும் விடுபட்டதாயும், |
| **विश्वातीतं** <br> **விஶ்வாதீதம்** | = | பிரபஞ்சத்திற்கு அப்பால்பட்டதாயும், |
| **विशुद्धं** <br> **விஶுத்$^{3}$த$^{4}$ம்** | = | பரிசுத்தமாயும், |
| **अद्वैतं** <br> **அத்$^{3}$வைதம்** | = | இரண்டற்றதாயும், |
| **अक्षरं** <br> **அக்ஷரம்** | = | அழிவற்றதாயும், |

**अनुभत्रवेद्यं** = அனுபவத்தால் மட்டும் அறியக்கூடியதாயும் உள்ள,
**அனுப4த்ரவேத்3யம்**

**चैतन्यं** = சைதன்யம்,
**சைதன்யம்**

**तत्पदस्य** = தத்பதத்தின்,
**தத்பத3ஸ்ய**

**लक्ष्योऽर्थः** = லக்ஷ்யமான அர்த்தமாகும்.
**லக்ஷ்யோ(அ)ர்த2:**

பலவித உபாதிகளிலிருந்து விடுபட்டதாய் ஜகத்திற்கு மேல்பட்டதாய், அதிசுத்தமாய், இரண்டற்றதாய், நாசமற்றதாய், அனுபவத்தினுல் மாத்திரம் அறியக் கூடியதாயுள்ள சைதன்யம் “**தத்**" “அது" என்கிற வார்த்தையின் லக்ஷ்யமான அர்த்தம் **(28)**

**தத்வமஸிவாக்யார்த்தம்: -**

**सामानाधिकरण्यं तदनु विशेषणविशेष्यता चेति ।**
**अथ लक्ष्यलक्षकत्वं भवति पदार्थात्मनां च संबन्धः ॥ २९ ॥**

**ஸாமாஞதி4கரண்யம் தத3னு விஶேஷணவிஶேஷ்யதா சேதி ।**
**அத2 லக்ஷ்யலக்ஷகத்வம் ப4வதி பதா3ர்தா2த்மஞம் ச ஸம்ப3ந்த4: ॥ 29 ॥**

**पदार्थात्मनां** = பதங்களின் அர்த்தமான பொருள்களுக்கு,
**பதா3ர்தா2த்மஞம்**

**सामानाधिकरण्यं** = ஸாமாஞதிகரண்யம்,
**ஸாமாஞதி4கரண்யம்**

**तदनु** = அதன்பின்,
**தத3னு**

**विशेषणविशेष्यता च** = விசேஷண விசேஷ்யபாவம்
**விஶேஷணவிஶேஷ்யதா ச**

**अथ** = பிறகு,
**அத2**

**लक्ष्यलक्षकत्वं च** = லக்ஷ்யலக்ஷகத்வம்,
**லக்ஷ்யலக்ஷகத்வம் ச**

**इति** = என்பவைகளில் ஒன்றும்,
**இதி**

**संबन्धः** = ஸம்பந்தமாக,
**ஸம்ப3ந்த4:**

| | | |
|---|---|---|
| **भवति**<br>**ப⁴வதி** | = | ஆகிறது. |

பதங்களுக்கு அர்த்தமாக விருக்கும் வஸ்துக்களுக்குள் ஸம்பந்தம் ஸாமாஞதிகரணியமாகவோ, விசேஷண விசேஷ்ய பாவமாகவோ, லக்ஷ்ய லக்ஷக ஸம்பந்தமாகவோ இருக்கும்.

[உதாஹரணம்: - "ஜானகீ வைதேஹீ", இங்கு ஜானகி என்கிற பதம் யாரைக் குறிக்கிறதோ அவளேயே வைதேஹீ என்கிற பதமும் குறிப்பதனுல் இரண்டு பதங்களின் அர்த்தமும் ஸமமான ஒரே வியக்தியை அதிகரணமாக ஆசிரயிப்பதினுல் இவ்விரு பதங்களுக்கும் ஸாமாஞதிகரண்ய ஸம்பந்தம் எனப்படும். "ஜானகீ ரூபவதீ", இங்கு ரூபவதீ என்கிற பதம் ஜானகியின் ஒரு குணத்தை விசேஷித்து (தனித்து) எடுத்துக் காட்டுவதால், இங்குள்ள இரு பதங்களுக்கும் உள்ள ஸம்பந்தம் விசேஷண விசேஷ்ய பாவம் ஆகும். "ஜானகீ அக்னி:" இங்கே வாஸ்தவத்தில் ஜானகி அக்னியுமில்லை, அக்னி ஜானகியுமல்ல; அப்படியிருந்தும் அக்னி என்ற சப்தத்தினுல் குறிக்கப்படுகின்ற அதன் தன்மையான தேஜஸ்ஸை மாத்திரம் கிரஹித்துக்கொண்டு ஜானகி மற்றவர்களால் நெருங்கமுடியாதவள் நெருங்கினுல் நாசத்தை அடைவார்கள் என்பதை குறிப்பிடக்கருதி அவளை அக்கினியென்று சொல்வதால் இங்குள்ள ஸம்பந்தம் லக்ஷ்ய லக்ஷக ஸம்பந்தம் என்பார்கள் இவ்வித மூன்றுவகை ஸம்பந்தங்களில் ஸாமாஞதிகரண்யமே இப்பொழுது பிரகிருதத்திற்கு வேண்டியிருப்பதால் அதையே மேல் சுலோகத்தில் விளக்குகிறார்.] **(29)**

## एकत्र वृत्तिरर्थे शब्दानां भिन्नप्रवृत्तिहेतूनाम् ।
## सामानाधिकरण्यं भवतीत्येवं वदन्ति लाक्षणिकाः ॥ ३० ॥

**ஏகத்ர வ்ருத்திரர்தே² ஶப்³தா³ஞம் பி⁴ன்னப்ரவ்ருத்திஹேதூஞம் ।**
**ஸாமாஞதி⁴கரண்யம் ப⁴வதீத்யேவம் வத³ந்தி லாக்ஷணிகா: ॥ 30 ॥**

| | | |
|---|---|---|
| **भिन्नप्रवृत्तिहेतूनां**<br>**பி⁴ன்னப்ரவ்ருத்திஹேதூஞம்** | = | வெவ்வேறுன ப்ரவ்ருத்தி நிமித்தங்களுள்ள, |
| **शब्दानां**<br>**ஶப்³தா³ஞம்** | = | சப்தங்களுக்கு, |
| **एकत्र अर्थे**<br>**ஏகத்ர அர்தே²** | = | ஒரே பொருளில், |
| **वृत्तिः**<br>**வ்ருத்தி:** | = | இருப்பது, |
| **सामानाधिकरण्यं**<br>**ஸாமாஞதி⁴கரண்யம்** | = | ஸாமாஞதிகரண்யமாக, |

| | | |
|---|---|---|
| **भवति** <br> **ப⁴வதி** | = | ஆகிறது, |
| **इत्येवं** <br> **இத்யேவம்** | = | என்று இவ்வாறு, |
| **लाक्षणिका:** <br> **லாக்ஷணிகா:** | = | லக்ஷணம் அறிந்தவர்கள், |
| **वदन्ति** <br> **வத³ந்தி** | = | சொல்கிறுர்கள். |

சப்தங்கள் ஏற்படுவதற்குள்ள காரணங்கள் வெவ்வேறுயிருந்த போதிலும் அவைகள் எல்லாமே ஒரே விஷயத்தை ஆசிரயித்திருக்குமாகுல் அப்போழுது ஸாமாகுதிகரண்யம் ஆகும் என்று அதன் லக்ஷணம் அறிந்தவர்கள் சொல்லுகி றுர்கள்.

[ஒரு சப்தம் ஒரு பொருளை உணர்த்துவதற்கு எது காரணமோ அதுவே ப்ரவ்ருத்தி நிமித்தம் எனப்படும். ஒவ்வொரு சொல்லுக்கும் ஒவ்வொன்று ப்ரவ்ருத்தி நிமித்தமாக இருக்கும். ஜனகனின் குமாரி என்பது **'जानकी' 'ஜானகீ'** என்ற பதத்திற்கு ப்ரவ்ருத்தி நிமித்தம். விதேஹநாட்டு அரசனின் குமாரி **என்பது 'वैदेही' 'வைதே³ஹீ'** என்ற பதத்திற்கு ப்ரவ்ருத்தி நிமித்தம். இவ்வாறு இரண்டு பதங்களுக்கும் ப்ரவ்ருத்தி நிமித்தங்கள் வெவ்வேறுயிருந்தபோதிலும் **'जानकी वैदेही' 'ஜானகீ வைதே³ஹீ'** என்று சொல்லும் பொழுது இரு பதங்களும் சேர்ந்து ஒரே ஸீதாவ்யக்தியைக் குறிப்பதால் இங்கு இரு பதங்களின் ஸம்பந்தம் ஸாமாகுதிகரண்யமாகும்.] **(30)**

## प्रत्यक्त्वपरोक्षत्वे परिपूर्णत्वं च सद्वितीयत्वम् ।
## इतरेतरं विरुद्धं तत इह भवितव्यमेव लक्षणया ॥ ३१ ॥

**ப்ரத்யக்த்வபரோக்ஷத்வே பரிபூர்ணத்வம் ச ஸத்³விதீயத்வம் ।**
**இதரேதரம் விருத்³த⁴ம் தத இஹ ப⁴விதவ்யமேவ லக்ஷணயா ॥ 31 ॥**

| | | |
|---|---|---|
| **प्रत्यक्त्वपरोक्षत्वे** <br> **ப்ரத்யக்த்வபரோக்ஷத்வே** | = | உள்ளிருக்கும் தன்மை, வெளியிலிருக்கும் தன்மை இவ்விரண்டும், |
| **परिपूर्णत्वं** <br> **பரிபூர்ணத்வம்** | = | (இரண்டற்று) எங்கும் நிறைந்திருக்கும் தன்மையும், |
| **सद्वितीयत्वं च** <br> **ஸத்³விதீயத்வம் ச** | = | இரண்டாவதோடு கூடியிருக்கும் தன்மையும், |
| **इतरेतरं** <br> **இதரேதரம்** | = | ஒன்றுக்கொன்று, |

| | | |
|---|---|---|
| **विरुद्धं**<br>**விருத்³த⁴ம்** | = | நேர் எதிரிடையானவை, |
| **ततः**<br>**தத** | = | ஆகையால், |
| **इह**<br>**இஹ** | = | இங்கு, |
| **लक्षणया एव**<br>**லக்ஷணயா ஏவ** | = | லக்ஷணையினால்தான், |
| **भवितव्यम्**<br>**ப⁴விதவ்யம்** | = | இருக்கத்தக்கது. |

பிரகிருதத்தில் (**தத் த்வம் அஸி** - " நீ அது" என்கிற விடத்தில்) நீ என்பதிலுள்ள உள்ளிருக்கும் தன்மையும் அது என்பதிலுள்ள வெளியிலிருக்கும் தன்மையும் அப்படியே இரண்டாவதோடிருக்கும் தன்மை நீ என்பதிலும் பரிபூர்ணமா யிருக்கும் தன்மை அது என்பதிலும், இருப்பவைகள் ஒன்றுக்கொன்று முறண்படு கின்றன ஆகையால் இந்த இடத்தில் லக்ஷணைதான் இருக்கவேண்டும்.

['த்வம்' பதத்திற்கு வாச்யார்த்தமான ஜீவனிடம் ப்ரத்யக்த்வமும் ஸத்விதீயத் வமும் உள்ளன. 'தத்' பதத்திற்கு வாச்யார்த்தமான ஈசுவரனிடம் பரோக்ஷத்வமும் பரிபூர்ணத்வமும் உள்ளன. ஆகவே ஒன்றுக்கொன்று நேர் எதிரிடையான தர்மங்களு டன் கூடியிருப்பதால் **तत्वमसि தத்வமஸி** வாக்யத்தின் அர்த்தம் பாதிதமாகிறது. ஆகையால் தத்பதத்திற்கும் த்வம்பதத்திற்கும் லக்ஷணைதான் கூறவேண்டும்.] **(31)**

**मानान्तरोपरोधान्मुख्यार्थस्यापरिग्रहे जाते ।**
**मुख्याविनाकृतेऽर्थे या वृत्तिः सैव लक्षणा प्रोक्ता ॥ ३२ ॥**

**மானாந்தரோபரோதா⁴ன்முக்²யார்த²ஸ்யாபரிக்³ரஹே ஜாதே ।**
**முக்²யாவினாக்ருதே(அ)ர்தே² யா வ்ருத்திः ஸைவ லக்ஷணா ப்ரோக்தா ॥ 32 ॥**

| | | |
|---|---|---|
| **मानान्तरोपरोधात्**<br>**மானாந்தரோபரோதா⁴த்** | = | வேறு ப்ரமாணத்திற்கு விரோதமாயிருப் பதால், |
| **मुख्यार्थस्य**<br>**முக்²யார்த²ஸ்ய** | = | முக்யமான வாச்யார்த்தத்தை, |
| **अपरिग्रहे जाते**<br>**அபரிக்³ரஹே ஜாதே** | = | வைத்துக்கொள்ள முடியாத நிலை ஏற்பட்டபொழுது, |
| **मुख्याविनाकृते**<br>**முக்²யாவினாக்ருதே** | = | முக்யார்த்தத்துடன் கூடவே இருக்கும், |
| **अर्थे**<br>**அர்தே²** | = | பொருளில், |

| | | |
|---|---|---|
| **वृत्तिः**<br>**வ்ருத்தி:** | = | இருப்பது, |
| **या**<br>**யா** | = | எதுவோ, |
| **सैव**<br>**ஸைவ** | = | அதுவே, |
| **लक्षणा**<br>**லக்ஷணா** | = | லக்ஷணையாக, |
| **प्रोक्ता**<br>**ப்ரோக்தா** | = | சொல்லப்பட்டுள்ளது. |

மற்றொரு பிரமாணத்திற்கு விரோதமாயிருப்பது காரணம்பற்றி முக்கியமான அர்த்தத்தைக் கைவிடும்படி ஏற்படும்போது, முக்கியமான அர்த்தத்தை விட்டு விலகாமலிருக்கும் ஒரு பதார்த்தத்தை குறிப்பது எதுவோ அதுவே லக்ஷணை என்று சொல்லப்பட்டிருக்கிறது. **(32)**

## निखिलमपि वाच्यमर्थं त्यक्त्वा वृत्तिस्तदन्वितेऽन्यार्थे ।
## जहतीति लक्षणा स्याद् गङ्गायां घोषवदिह न ग्राह्या ॥ ३३ ॥

**நிகி²லமபி வாச்யமர்த²ம் த்யக்த்வா வ்ருத்திஸ்தத³ன்விதே(அ)ன்யார்தே² ।**
**ஜஹதீதி லக்ஷணா ஸ்யாத்³ க³ங்கா³யாம் கோ⁴ஷவதி³ஹ ந க்³ராஹ்யா ॥ 33 ॥**

| | | |
|---|---|---|
| **निखिलमपि वाच्यमर्थं**<br>**நிகி²லமபி வாச்யமர்த²ம்** | = | வாச்யார்த்தம் முழுவதையும், |
| **त्यक्त्वा**<br>**த்யக்த்வா** | = | விட்டு விட்டு, |
| **तदन्विते**<br>**தத³ன்விதே** | = | அந்த வாச்யார்த்தத்துடன் ஸம்பந்தப்பட்ட, |
| **अन्यार्थे**<br>**அன்யார்தே²** | = | வேறு பொருளில், |
| **वृत्तिः**<br>**வ்ருத்தி:** | = | இருப்பது, |
| **गङ्गायां**<br>**க³ங்கா³யாம்** | = | கங்கையில், |
| **घोषवत्**<br>**கோ⁴ஷவத்** | = | இடைச்சேரி என்பதுபோல், |
| **जहतीति**<br>**ஜஹதீதி** | = | ஜஹதி என்ற, |

**लक्षणा** = லக்ஷணையாக,
**லக்ஷணு**

**स्यात्** = ஆகும் (இது),
**ஸ்யாத்**

**इह** = இங்கு,
**இஹ**

**न ग्राह्या** = ஏற்றுக்கொள்ளத்தக்கதல்ல.
**ந க்[3]ராஹ்யா**

வாச்யமான அர்த்தம் முழுவதையும் விட்டு விட்டு வாச்யார்த்தத்துடன் ஸம்பந்தப்பட்ட வேறு பதார்த்தத்தைக் குறிப்பது “ஜஹதீ லக்ஷணு" (விட்ட லக்ஷணை) யாகும். “கங்கையில் இடைச்சேரி” என்பதுபோல. இது இங்கே பொருந்தாது.

[கங்கை என்கிற சப்தம் முக்கியமாக ஜலப்ரவாஹத்தையே குறிக்கும். அதில் சேரி இருக்கமுடியாது. ஆகையால் “கங்கையில்” என்பதற்கு கங்கைக்கு ஸம்பந்தப் பட்ட “கங்கைக் கரையில்” என்று அர்த்தம் சொல்ல வேண்டியிருக்கிறது. இங்கு வாச்யார்த்தம் முழுவதையும் விட்டு விடுவதால் ஜஹல்லக்ஷணையாகும். ‘தத்த்வமஸி' என்ற இடத்தில் வாச்யார்த்தம் முழுவதையும் விடாமல் ‘சைதன்யம்' என்ற அம்சத்தை வைத்துக் கொள்வதால் இங்கு ஜஹல்லக்ஷணை பொருந்தாது.] **(33)**

## वाच्यार्थ मत्यजन्त्या यस्या वृत्तेः प्रवृत्तिरन्यार्थे ।
## इयमजहतीति कथिता शोणो धावतिवदत्र न ग्राह्या ॥ ३४ ॥

**வாச்யார்த[2] மத்யஜந்த்யா யஸ்யா வ்ருத்தே: ப்ரவ்ருத்திரன்யார்தே[2] ।**
**இயமஜஹதீதி கதி[2]தா ஶோணே தா[4]வதிவத[3]த்ர ந க்[3]ராஹ்யா ॥ 34 ॥**

**वाच्यार्थ** = வாச்யமான அர்த்தத்தை,
**வாச்யார்த[2]**

**अत्यजन्त्याः** = விடாத,
**அத்யஜந்த்யா:**

**यस्या** = எந்த,
**யஸ்யா**

**वृत्तेः** = விருத்திக்கு,
**வ்ருத்தே:**

**अन्यार्थे** = வேறு அர்த்தத்தில்,
**அன்யார்தே[2]**

**प्रवृत्तिः** = செல்வது ஏற்படுகிறதோ,
**ப்ரவ்ருத்தி:**

| | | |
|---|---|---|
| **इयं**<br>**இயம்** | = | இது, |
| **शोणो धावतिवदत्र**<br>**ஶோணோ தா⁴வதிவத³த்ர** | = | சிவப்பு ஓடுகிறதுபோல, |
| **अजहतीति**<br>**அஜஹதீதி** | = | அஜஹல்லக்ஷணை (விடாத லக்ஷணை) என்று, |
| **कथिता**<br>**கதி²தா** | = | சொல்லப்பட்டது (இதுவும்), |
| **अत्र**<br>**அத்ர** | = | இங்கு, |
| **न ग्राह्या**<br>**ந க்³ராஹ்யா** | = | ஏற்றுக்கொள்ளத்தக்கதல்ல. |

வாச்யமான அர்த்தத்தை விடாமலே வேறு பதார்த்தத்தை கிரஹிக்கக் கூடிய விருத்தியை "அஜஹதி லக்ஷணு" (விடாத லக்ஷணை) என்பார்கள். "சிவப்பு ஓடுகிறது" என்பதுபோல. அதுவும் இங்கே பொருந்தாது.

[வாச்யார்த்தம் முழுவதையும் விட்டு விட்டு வேறு அர்த்தத்தை ஏற்றுக் கொள்வது ஜஹல்லக்ஷணை (விட்ட லக்ஷணை). வாச்யார்த்தத்தை விடாமல் அதனுடன் வேறு அர்த்தமும் கொள்வது அஜஹத் (விடாத) லக்ஷணை. **शोणो धावति** (**ஶோணோ தா⁴வதி**) (சிவப்பு ஒடுகிறது.) இங்கு **शोणो** என்பது சிவப்பு நிறத்தைக் குறிக்கும். நிறம் மட்டும் தனியாக ஒடக்கூடியதல்ல. ஆகையால் **शोणो** என்பதற்கு 'சிவப்புக்குதிரை' என்று அர்த்தம் சொல்கிறோம். குதிரை ஒடக்கூடியது. இங்கு வாச்யார்த்தமான சிவப்பு நிறத்தை விடாமல் அத்துடன் குதிரை என்ற அர்த்தத்தை யும் சேர்த்துக் கொள்வதால் அஜஹல்லக்ஷணையாகும். **'तत्वमसि'** 'தத்வமஸி' என்ற இடத்தில் வாச்யார்த்தத்திலேயே ஒரு அம்சத்தை விட்டு விடுவதால் அஜஹல்லக்ஷணையும் பொருந்தாது.] **(34)**

**जहदजहतीति सा स्याद्या वाच्यार्यैकदेशमपहाय ।**
**बोधयति चैकदेशं सोऽयं द्विज इतिवदाच्रयेदेनाम् ॥ ३५ ॥**

**ஜஹத³ஜஹதீதி ஸா ஸ்யாத்³யா வாச்யார்யைகதே³ஶமபஹாய ।**
**போ³த⁴யதி சைகதே³ஶம் ஸோ(அ)யம் த்³விஜ இதிவதா³ச்ரயேதே³ஞம் ॥ 35 ॥**

| | | |
|---|---|---|
| **या**<br>**யா** | = | எது, |
| **वाच्यार्यैकदेशं**<br>**வாச்யார்யைகதே³ஶம்** | = | வாச்யமான அர்த்தத்தில் ஒரு அம்சத்தை, |

